POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6 TN-MS C. P. P. 55 ANNA Leading Progressive Tamil Daily of the People

# இலங்கைத் தமிழருக்கு உதவ

Regd. No. TN-MS (C) 422 Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 9] சென்னை 20-9-1985 வெள்ளி வெளியூர் 21-9-1985 சனி [இதழ் 327

# நிதி தாரீர்

## முதல்வர் புரட்சிதலைவர் வேண்டுகோள் அறிக்கை



**சென்னை, செப். 20- இலங்கைத்தமிழருக்காக செப்டம்பர் 24-ந் தேதி உண்ணாவிரதம் இருக்கும் நாளில் அகதிகளாக வந்த இலங்கைத் தமிழ்க் குடும்பங்களுக்குதாராளமாக நிதி வழங்குமாறு முதல்வர் புரட்சித் தலைவர் வேண்டுகோள் விடுத்தார்.**

இலங்கைத் தமிழர் துயர் துடைக்க முதல்வர் புரட்சித்தலைவர் வேண்டுகோள் விடுத்து வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:-

இலங்கைத்தமிழர் நலத்திலும் நல்வாழ்விலும் தமிழ்நாட்டு மக்கள் கொண்ட பரிவும் பாசமும் அனைவரும் அறிந்துள்ளனர்.

அவர்கள் துயருற்று வாடி நிற்கும் இந்த வேளையில் நம நெஞ்சங்கள் புண்ணாகி இருப்பதும் யாவரும் அறிந்ததே.

நாடுகள், நாடுகளின் எல்லைகள், கடல்கள் போன்ற பூகோளப பிரிவுகள் நம்மிடையே இருக்கும் அன்பையும், பாசத்தையும் பிரித்துவிட முடியாது.

### தீர்வு காண...

சர்வதேச சட்டமரபுகள் காரணமாக அவர்கள் பிறந்து வாழும்-அவர்கள் நாட்டுப் பிரச்சினையில் நம்மால் தலையிட இயலாது என்றாலும் அவர்கள் மானத்தோடும், கவுரவத்தோடும் வாழ நாம் அனைவரும் அகமும் புறமும் வேண்டிக் கொண்டே இருக்கிறோம்.

அமைதியாக - அவர்களின பிரச்சினைக்குத் தீர்வு காண பல்லாற்றானும் முயன்று கொண்டே இருக்கிறோம்.

எனினும் திம்புவில் நடந்த பேச்சுவார்த்தைகளுக்குப் பின்னும் இலங்கைத் தமிழர்கள் மீது கட்டவிழ்த்து விடப்பட்டிருக்கிற கொடுமையான சம்பவங்கள் நம மனததை வருததுகின்றன. இந்த சம்பவங்களைக் கண்டிக்கும் வகையிலும் இலங்கைத் தமிழ்ச் சகோதரர்கள் பால் நமது உள்ளக் கிடக்கையைக் காட்டும் வகையிலும் தமிழ்நாட்டு மக்கள் அனைவரும் 24-9-1985 ஒரு நாள் உண்ணா நோன்பு இருப்பது என்று அனைத்துக் கட்சித தலைவர்கள் கூடி செய்த முடிவைத் தமிழ் நாட்டு மக்களின் முன் வைக்க நான் விழைகிறேன்.

### நமது உதவி

வீடிழந்து நாடிழந்து அகதிகளாக வந்த வண்ணம உள்ள இலங்கைத் தமிழ்க் குடும்பங்களின் மறுவாழ்வுக்கென இந்த உண்ணா நோன்பு நாளில் நம்மால் இயன்ற நிதி உதவியைக் கொடையாக செலுத்துவது என்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

இந்தப் பணியில் ஈடுபடும் நண்பர்கள் தமிழ்நாடு அரசின் அனுமதி பெற்ற உண்டியல்களை எடுத்துக் கொண்டு 24-9-1985ல் இருந்து தங்களை அணுகும போது தாராளமாக தங்கள் உதவியை நல்குமாறு வேண்டுகிறேன்.

மாவட்ட ஆட்சித் தலைவரின் பெயரிலான காசோலை மூலமாகவும் தங்கள் உதவியைத் தரலாம்.

இந்த நற்பணிக்கு தராளமாகஉதவவேண்டி தங்களை விரும்பி அழைக்கின்றேன்.

தங்கள் அன்புள்ள
எம். ஜி. இராமச்சந்திரன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் அந்த வேண்டுகோளில் குறிப்பிட்டுள்ளார்.

# கழக முன்னணித் தொண்டர்கள் இல்லங்கள் புரட்சித்தலைவர் வருகை

மதுரை, செப். 20— தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் மதுரையில் கழக முன்னணித் தொண்டர்களின் இல்லங்களுக்கு சென்று மதுரை மாநகரையே மகிழ்ச்சியில் ஆழ்த்தினார்.

காலை ஒன்பது மணிக்கு அசோகா ஓட்டலில்இருந்து தமது துணைவியார் ஜானகி அம்மையாருடன் புரட்சித் தலைவர் முதன்முதலாக மறைந்த முத்தண்ணனின் இல்லத்திற்குச் சென்றார்.

முத்தண்ணனின் திருவுருவப் படத்திற்குபுரட்சித் தலைவரும் ஜானகி அம்மையாரும் ரோஜா மாலைகள் அணிவித்து அஞ்சலி செலுத்தினர்.

அதன் பின்னர் முத்தண்ணனின் துணைவியார் ரஞ்சிதத்தம்மாளிடம் துக்கம் விசாரித்தனர்.

முத்தண்ணன் மறைந்த பின்னர் முதன்முதலாக தற்போதுதான் புரட்சித் தலைவர் மதுரைக்குச் சென்று இருக்கிறார்.

### காளிமுத்து இல்லத்தில்

புரட்சித்தலைவருடன் அமைச்சர் திருநாவுக்கரசு, மேலவைக் கொறடா ஜேப்பியார், மாவட்டச் செயலாளர் சேட்டப்பட்டி முத்தையா ஆகியோர் சென்றனர்.

முத்தண்ணனின் இல்லத்திலிருந்து புரட்சித்தலைவர் அமைச்சர் காளிமுத்துவின் இல்லத்திற்குச் சென்றார். வாயிலில் புரட்சித் தலைவரையும் அவரது துணைவியாரையும் காளிமுத்துவும் அவரது துணைவியாரும் பெரிய மாலை அணிவித்து வரவேற்றனர்.

காளிமுத்துவின் பெண் குழந்தைக்கு சத்தியா என்று புரட்சித் தலைவர் பெயர் சூட்டினார்.

காலைச் சிற்றுண்டியாக காளிமுத்துவின் இல்லத்தில் புரட்சித் தலைவர் இடியாப்பம் சாப்பிட்டார்.

### பாண்டியன்

புரட்சித் தலைவர்சென்ற சாலைகளில் எல்லாம் மக்கள் கட்லெனத்திரண்டு இருந்தார்கள் புரட்சித் தலைவர் அவர்கள் புன்முறுவல் பூக்க காத்திருந்த மக்களுக்கெல்லாம்வணக்கம் கூறிக் கொண்டே சென்றார்.

அமைச்சர் காளிமுத்துவின் இல்லத்திலிருந்து திருப்பரங்குன்றத்தில் உள்ள மதுரை மாநகர் மாவட்டச் செயலாளர் எஸ். பாண்டியன் இல்லத்திற்குப்புரட்சித தலைவர் சென்றார்.

வாயிலில் பாண்டியனும், அவரது துணைவியாரும் புரட்சித்தலைவருக்கும் அவரது துணைவியார் ஜானகி அம்மையாருக்கும் பெரிய மாலைகள் அணிவித்து வரவேற்றனர்.

### பட்டுராசன் வரவேற்பு

பின்னர் புரட்சித்தலைவர் அவர்கள் தமது துணைவியாருடன் முன்னாள் மேயர் பட்டுராசன் இல்லத்திற்கு வருகை தந்தார்.

வாயிலில் பட்டுராசனும் அவரது துணைவியார் சரோஜினியும் மாலைகள் அணிவித்து ஆரத்தி எடுத்து வரவேற்றனர். பேராயர்கள் கஸ்மீர் போத்திராஜுலு ஆகியோர் புரட்சித் தலைவர் அவர்கள் நலம் பெறுவதற்காக பிரார்த்தனை நடத்தினர்.

பைபிளில் 112-வது சங்கீதத்தில் ஒன்பதாவது வசனத்தை அவர்கள் வாசித்தனர்.

வாரிஇறைத்தான், ஏழைகளுக்கு கொடுத்தான், அவனுடையநீதி என்றென்றைக்கும்நிலைத்து நிற்கும். அவன் கொம்பு மகிமையால் உயர்ந்திருக்கும் என்ற வாசகங்களை பேராயர்கள் வாசித்தனர்.

அந்த வாசகங்கள் புரட்சித்தலைவருக்காகவே எழுதப்பட்டது போல் இருப்பது கண்டுஅனைவரும் வியந்தனர்.

பட்டுராசனின்இல்லத்தில் புரட்சித் தலைவரும், ஜானகி அம்மையாரும் மோர் அருந்தினர்.

பட்டுராசனின் குழந்தைகளுக்கு புரட்சித் தலைவர் பரிசு அளித்தார்.

### நவநீதன் இல்லத்தில்

மதுரைநகர் மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் நவநீத கிருஷ்ணன் இல்லத்திற்கு புரட்சித் தலைவர் வருகை தந்தார்.

வழிநெடுக மக்கள் கூட்டலெனத் திரண்டு இருந்தனர். வாயிலில் முன்னாள் துணை மேயர் முனியசாமி பரமநாதன் ஜக்கையன் ஆகியோர் வரவேற்றனர்.

நவநீதனின் தந்தையார் சோலை அழகுக் கோனார் புரட்சித் தலைவருக்கு மாலை சூட்டினர். நவநீதனின் அன்னையார் மீனாட்சி அம்மை ஜானகி அம்மையாருக்கு மாலை சூட்டினார்.

நவநீதனின் பெண் குழந்தைக்கு மீனாட்சி என்று பெயர் சூட்டினார்.

அனைவருக்கும் ஒரே வியப்பு, தென்பாண்டிச் சீமையில் பாட்டியின் பெயரை பேத்திக்குச் சூட்டுவது மரபு. இயல்பாக நவநீத கிருஷ்ணனன் அன்னையார் பெயரையே நவநீத கிருஷ்ணனின் பெண் குழந்தைக்கு சூட்டினார்.

இதனைக் கூறியபோது புரட்சித்தலைவர் பெரிதும் மகிழ்ந்தார்.

மீனாட்சி அம்மன் வெண்கலச் சிலையை நவநீத கிருஷ்ணன் பரிசளித்தார்.

நவநீத கிருஷ்ணனின் மூத்த பையனையும், பெண் குழந்தையையும் தமது மடியில் அமரச் செய்து ஆசீர்வதித்தார்.

# 24ந் தேதி விடுமுறை

சென்னை, செப் 20— வரும் 24ந் தேதி முழு அடைப்பு உண்ணாவிரத நாளை யொட்டி விடுமுறை தினமாக அரசு அறிவித்துள்ளது.

அரசு அலுவலகங்கள், அரசு சார்பு நிறுவனங்கள், தனியார் நிறுவனங்கள் போக்குவரத்து வங்கிகள் பல்கலைக் கழகம், கல்வி நிறுவனங்கள், சினிமா தியேட்டர்கள் கடைகள், ஓட்டல்கள் மூடப்பட்டிருக்கும்.

ஆனால் அத்யாவசிய சர்வீஸ்களான குடிதண்ணீர் மின்சாரம், மருத்துவமனை. போலீஸ், பத்திரிகைகள் பால் வினியோகம் ஆகியவைகள் வழக்கம் போல இயங்கும்.

24ந் தேதி யன்று நெகோஷியபிள் இன்ஸ்டியுமெண்ட் சட்டத்தின் கீழ் சிறப்பு விடுமுறையாக அறிவிக்கப் பட்டிருக்கிறது.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

தப்பட வேண்டும். இதுவும் இலங்கைத் தமிழர் நிவாரண நிதியில் சேர்க்கப் படும்.

24 9-85 அன்று விடுமுறை நாளாக அறிவிக்கப்பட்டுள்ளது.

உண்ணாவிரதம் இருக்கும் இடத்துக்கு அனைவரும் தாங்களாகவே சென்று பங்கேற்குமாறு வேண்டப் படுகிறார்கள்.

மாலை 6 மணிக்கு மேல் திரும்பிச்செல்ல வழக்கம் போல பேருந்துகள் ஓடும்.

இவ்வாறு அரசு தலைமை செயலாளர் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.



ஆண்டிப்பட்டி தொகுதி மக்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் நன்றி தெரிவித்தபோது எடுத்தபடம் அருகில் முதல்வரின் துணைவியார் ஜானகி அம்மையார் இருக்கிறார்.

# அகதிகளுக்கு உண்டியல் மூலம் நிதி வசூல் விவரம்: அந்தோணி அறிவிப்பு

சென்னை, செப். 20— இலங்கை அகதிகளுக்காக உண்டியல் மூலம் நிதி வசூலிப்பது குறித்த விவரத்தை அரசு தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி அறிவித்தார்.

செப்டம்பர் 24ந் தேதி நடைபெற இருக்கும் முழு அடைப்பு—உண்ணாவிரதம் குறித்து அரசு தலைமை செயலாளர் டி.வி. அந்தோணிவிடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

13-9-85 மற்றும் 14-9-85 அன்று முதல்வர் தலைமையில் அனைத்துக் கட்சித் தலைவர்கள் கூடி பேசி எடுத்த தீர்மானங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

அந்த தீர்மானங்களின் அடிப்படையில் 24-9-85 அன்று முழு அடைப்பு நாளாகவும், உண்ணாவிரத நாளாகவும் அனுசரிக்கப்படும்.

தமிழ் நாட்டிலுள்ள மக்கள் அனைவரும் காலை 6 மணியிலிருந்து மாலை6 மணி வரை உண்ணாவிரதத்தில் பங்கேற்க இருக்கிறார்கள்.

உண்ணாவிரதம் ஆங்காங்கே முக்கியமான இடங்களில் நடைபெறும்,

அரசியல் கட்சித்தலைவர்களும், அமைச்சர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் ஆங்காங்கே உண்ணாவிரத பந்தல்களில் பங்கேற்கிறார்கள்.

பொதுமக்கள் அனைவரும் அவர்கள் விருப்பத்துக்கு எங்கெங்கு நடக்கும் உண்ணாவிரதத்தில் கலந்து கொள்ள விரும்புகிறார்களோ அங்கங்கே கலந்து கொள்ளலாம்.

உண்ணா விரதத்தின் போது இலங்கைத் தமிழர் நிதிக்கு நிதிதிரட்ட உண்டியல்களை எடுத்துக்கொண்டு தொண்டர்களும் அரசியல்வாதிகளும், மாணவர்களும், ஏனையோரும் வருவார்கள், நிதி உதவி அனைவரும் தாராளமாகத் தரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளப் படுகிறது.

''இலங்கைத்தமிழர் நல்வாழ்வு நாள் 24-9-85''- என்ற கொடிகளை சட்டையில் அணிந்து கொண்டு கொடைகளைப் பெறுவோர் உண்டியலில் ஒரு ரூபாய் முதல் அவர்கள் மனமுவந்து இஷ்டம்போல் தாராளமாக வழங்க வேண்டும்.

24ந் தேதி முதல் 28ந் தேதி வரை இலங்கைத் தமிழருக்காக நிதி வசூல் செய்யப்படும்.

19 மாவட்டங்களிலும் மாவட்ட ஆட்சித்தலைவர்கள் அந்தந்த தாலுக்காக்களில் வட்டாட்சியர், மூலமாக உண்டியல்கள்வழங்கப் பட உள்ளது.

அனைத்துக் கட்சித் தலைவர்களும் தொண்டர்களும் பொறுப்பு ஏற்றுக் கொண்டு அந்தந்த தாசில் தாரிடம் உண்டியல்களைப் பெற்று தாராளமாக நன் கொடைகளைப் பெற்று அந்த நன் கொடைகளுடன் உண்டியல்களை திருப்பித் தருமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

"சீல்" வைக்கப்பட்ட உண்டியல்கள் மீது முதலமைச்சரின் வேண்டுகோள் இருக்கிறது.

உண்டியலில்எண், யாருக்கு வழங்கப்பட்டுள்ளது. எந்த வட்டாட்சியரால் வழங்கப்பட்டுள்ளது என்ற விவரங்கள் பொறிக்கப் பட்டு உண்டியல் வழங்கப்பட இருக்கிறது.

கொடுக்கப்பட்ட சீல் வைக்கப்பட்ட உண்டியல்களைத் திருப்பிப்பெறும் போது சரி பார்க்க வேண்டும் என்பதற்காக இந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

### குழு அமைப்பு

இந்த உண்டியல்கள் 29-ந் தேதி ஞாயிறன்று ஒரு பொது இடத்தில் எல்லா தாலுகா அலுவலகங்களிலும் எண்ணப்படும்.

மாவட்ட ஆட்சித் தலைவர் இந்த உண்டியல்களை எண்ணும்போதுமேற்பார்வையிட பொதுமக்கள் பிரதிநிதிகள் கொண்ட ஒரு குழுவை நியமிப்பார்கள்.

உண்டியல்களை எண்ணி முடிந்ததும் உண்டியல்களில் உள்ள தொகை மாநில இலங்கைத் தமிழர் நிதிக்கு அனுப்பி வைக்கப்படும்.

உண்டியல்கள் மூலமாக நிதி வழங்குவது தவிர காசோலைகளின் மூலமாகவும் மாவட்ட ஆட்சித் தலைவர்களுக்கு அன்பளிப்பாக இலங்கைத் தமிழர் நிதிக்கு அனைவரும் வழங்குமாறு கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இதில் இலங்கைத் தமிழர் நிவாரணநிதி என்று எழு

[4-ம் பத்தி பார்க்க]

# அமைச்சர்கள் உண்ணாவிரதம்: நிதிதிரட்ட $1\frac{1}{2}$ கோடி கொடிகள்

சென்னை செப் 20— இலங்கைத்தமிழர் துயர் துடைப்பு நிதிக்காக ஒன்றரைக் கோடி கொடிகள் அச்சிடப்பட்டுள்ளன என்று தலைமைச்செயலாளர் டி. வி. அந்தோணி தெரிவித்துள்ளார்.

தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி நிருபர்களிடம் கூறியதாவது:-

இலங்கைத் தமிழர் துயர் துடைக்க 24ந் தேதி நடைபெறும் முழு அடைப்பு—உண்ணாவிரத நாளில் மக்களுக்கு வினியோகம் செய்ய ஒன்றரைக் கோடி கொடிகள் அச்சடிக்கப்பட்டுள்ளன.

கொடி தினத்தில் வழங்குவது போல் இந்த கொடிகள் வழங்கப்படும்.

கறுப்பு நிறத்தில் இந்த கொடி இருக்கும். இலங்கைத் தமிழர் நல்வாழ்வு நாள் 24-9-1985 என்று அதில் எழுதப்பட்டிருக்கும்.

24-ந் தேதி காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரை கடைகள்— அலுவலகங்கள்— வாகனங்கள் நடமாட்டம் இருக்காது.

இந்த விபரங்கள்ரயில்வே துறைக்கும், விமானத் துறைக்கும் தெளிவாக்கப் பட்டிருக்கிறது.

அவர்கள் இதையொட்டி முடிவுகள் எடுப்பார்கள்.

அமைச்சர்கள் உண்ணாவிரதமிருக்குமிடம் முதல்வர் சென்னை வந்த பிறகு அறிவிக்கப்படும்.

அனைத்து அரசியல் கட்சிகள் சார்பில் உண்ணாவிரதம் குறித்து இன்று மாலை அந்தந்த கட்சி செயலாளர்களுடன் பேச இருக்கிறேன். முதல்வரைக் கலந்து கொண்டு இதுபற்றிய இடமும் அறிவிக்கப்படும்.

இலங்கைத்தமிழர் பிரச்சினையில் நம்முடையஒற்றுமையை உலகிற்கு காட்ட வேண்டுமென்று முதல்வர் வேண்டுகோள் விடுத்துள்ளார். ஆகவே எல்லோரும் உண்ணாவிரதத்தில் பங்கேற்க வேண்டும்.

இவ்வாறு அந்தோணி கூறினார்



**பெருந்தன்மை**

ஒருவர் அறியாத்தனமாக நமக்குப் பிழை புரிகிறார் என்றால் அதனைப் பொருட்படுத்தாது விட்டுவிடுதல் பெருந்தன்மையாகும்.

—பேரறிஞர் அண்ணா

**நன்முறை**

நல்ல முறை தீய முறை என்பன காலத்துக்குக்காலம் மாறுபடுகிறது. உடன்கட்டையேறல் ஒரு காலத்தில் நல்ல முறை அதுவே இப்போது தீயது.

—தந்தை பெரியார்

# காங்கிரஸ் தலைவர் சோனியாகாந்தியா? ராஜீவ் பேட்டி



புதுடெல்லி, செப். 20— தனது மனைவி சோனியா காந்தியை காங்கிரஸ் தலைவராக்கும் எண்ணம் எதுவும் இல்லை என்று பிரதமர் ராஜீவ் காந்தி திட்டவட்டமாகக் கூறினார்.

பிரதமர் ராஜீவ் காந்தி ஒரு பேட்டியில் கூறியதாவது:—

சோனியா காந்தியை அகில இந்திய காங்கிரஸ் கட்சித் தலைவராக ஆக்கும் பிரச்சனையே எழவில்லை. காங்கிரஸ்கட்சியின்சாதாரண உறுப்பினராகக்கூட சோனியா இல்லை. அரசியலில் ஈடுபடும் எண்ணம் அவருக்கு இல்லை என்றார்.

பஞ்சாப் சட்டமன்ற தேர்தலில் வெற்றி வாய்ப்பு பற்றி ராஜீவிடம் கேட்கப்பட்டது.

அதற்கு ராஜீவ் பதிலளிக்கையில் பஞ்சாப் தேர்தலில் காங்கிரஸ் கட்சி வெற்றிக்காக முயற்சித்து வருகிறது. எங்களது சொந்த பலத்தில் நாங்கள் பெரும்பான்மை இடங்களில் வெற்றி பெறுவோம் என்று நம்புகிறோம்.

தேர்தல் முடிவுகள் வெளிவந்த பிறகு தான் கூட்டணி மந்திரிசபை பற்றி எண்ணிப் பார்க்க முடியும்.

பஞ்சாப் மாநிலத்தின் எல்லையைக் கடந்து பலர் வருவதைத் தடுக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம். உள்துறை அமைச்சர் அந்தப்பணியில் ஈடுபட்டுள்ளார்.

இவ்வாறு பிரதமர் ராஜீவ் காந்தி கூறினார்.

## புற்றுநோய் பற்றிய ஆய்வு: அமெரிக்காவுடன் கூட்டு முயற்சி

புதுடெல்லி, செப். 20— அமெரிக்க வல்லுநர்கள் எட்டு பேர் அடங்கிய ஒரு குழு இந்தியாவுக்கு வந்துள்ளது. இந்திய விஞ்ஞானிகள் 25 பேருடன் இந்த வல்லுநர்கள் "இன்டர்ஃபெரான்" பொருள் குறித்து ஆய்வு நடத்த இருக்கின்றனர். நான்கு நாட்களுக்கு நடக்கும் இவ்வாய்வு கூட்டு இந்திய அமெரிக்க முயற்சியாகும்.

"இன்டர்ஃபெரான்" என்பது மனித உடல் உற்பத்தி செய்யும் வைரஸ் எதிர்ப்பு பாதுகாப்பு பொருளாகும். புற்றுநோய் வளர்ச்சியைக் கட்டுப்படுத்துவதில் இதற்கு பேராற்றல் இருக்கிறதாகக் கருதப்படுகிறது.

அமெரிக்க குழுவின் தலைவர் டாக்டர் ராபர்ட் ஃப்ரைட்மென். 'யூனிஃபார்ம்டு சர்வீசஸ் யூனிவர்ஸிடி ஆஃப் ஹெல்த் ஸயன்ஸ்' நிலையத்திலுள்ள நோய் கூற்றியல் துறைத் தலைவராவார். மேரிலாந்தில் பெதஸ்டாவில் உள்ளது. அந்த நிலையம்.

## தமிழ்நாடு பரிசுசீட்டு குலுக்கல்

சென்னை, செப். 20— தமிழ்நாடு பரிசு சீட்டு திட்டத்தின்கீழ் நடைபெறவுள்ள 200 வது குலுக்கல் 22ந் தேதி மாலை 3 மணி அளவில் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடைபெறுகிறது.

# புரட்சித்தலைவரால் ஆண்டிப்பட்டி அரசன்பட்டி ஆகிறது

## நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் பேச்சு

ஆண்டிப்பட்டி, செப். 20- புரட்சித் தலைவர் தலைவரால் ஆண்டிப்பட்டி அரசம்பட்டி ஆகிறது என்று நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் கூறினார்.

ஆண்டிப்பட்டி விழாவுக்கு தலைமை வகித்த டாக்டர் நாவலர் கூறியதாவது:-

முப்பிறவியெடுத்த புரட்சித் தலைவர் 3-ம் முறையாக ஆட்சி பீடம் ஏறியிருக்கிறார்.

1967ல் பேரறிஞர் அண்ணா கழக அரசை அமைத்தார். அதன் பிறகு விந்துபட்ட அண்ணாவின் அரசை 1977-ல் தூக்கி நிறுத்தியவர் புரட்சித்தலைவர்.

ராமன் இருக்கும் இடம் அயோத்தி என்பார்கள். அது போல ராமச்சந்திரன் இருக்கும் இடம் அயோத்தி. ஆண்டிப்பட்டி அரசம்பட்டியாக மாறுகிறது.

### முதலவர் சாதனை

1977-ல் அரசின் வருவாய் ரூபாய் 70 கோடியாக இருந்தது. இந்த ஆண்டு ரூபாய் 3100 கோடிக்குவரவு செலவு நடக்கிறது.

7 வது ஐந்தாண்டு திட்டத்திற்கு 6 ஆயிரம் கோடி கேட்டு 4000 கோடி தான் தருவோம் என்றார்கள்.

ஆனால் புரட்சித்தலைவர் நேரடையாக பேசி 5,600 கோடி பெற்றுவந்தார்.

ஆயிரம் கோடி அதிகம் பெற்று வந்தார். வேறு எந்த மாநிலமும் இப்படிச் சேட்ட தொகை பெற்றதில்லை.

இது தவிர மலைவாழ் மக்களுக்காக ரூபாய் 4 கோடி பெற்று வந்தார்.

இந்தியாவில் 22 மாநிலங்களில் எந்த மாநிலமும் பெறாத அளவு வசதி தமிழகம் பெற்றுள்ளது.

இந்த ஆண்டில் ரூபாய் 26 கோடிக்கு சீருடை பாட புத்தகங்கள் வழங்கப்படுகின்றன.

குடிசைகளுக்கு ரூபாய் 2½ வாங்கி 4 லட்சம் குடிசைகளுக்கு மின்விளக்கு தரப்பட்டது.

அதை இலவசமாக தரச் சொல்லி முதல்வர் உத்தரவிட்டார். இப்போது 6½ லட்சம் குடிசை வீடுகளுக்கு இலவச மின்சாரம் தரப்படுகிறது.

### அண்ணா வழியில்..

5 ஏக்கருக்கு கீழ் உள்ள விவசாயிகட்கு இலவசமாக மின்சாரம் தரப்படுகிறது. ரூபாய் 60 முதல் 80 கோடி வரை இலவசமாக மின்சாரம் தரப்படுகிறது.

மின்சார இலாகாவிற்கு ரூபாய் 120.130 கோடி மான்யம் தரப்படுகிறது

என்றும் மார்கண்டேயன் போல அரிசிவிலை ரூபாய் 1.75 ஆக இருக்கிறது இதற்காக ரூபாய் 90 கோடி மானியம் தரப்படுகிறது. 22 மாநிலங்களில் தமிழகம் தவிர வேறு எங்கும் இந்த நிலை இல்லை.

முதியவர்கட்கு உதவுகிறோம்.

விதவைப் பெண்ணை மறுமணம் புரிந்தால் ரூ 5 ஆயிரமும் திருமணச் செலவுக்கு ரூ 500ம் கொடுக்கிறோம். கலப்பு மணம் செய்து கொண்டவர்களுக்கு உதவுகிறோம்.

"பணக்காரர்களிடம் இருந்து பணத்தை தட்டி எடு ஏழைகளுக்கு கட்டிக் கொடு" என்று அண்ணா சொன்ன அந்த வழியில் புரட்சித் தலைவர் செயல்படுகிறார்.

இவ்வாறு நாவலர் பேசினார்.

### ராகவானந்தம்

கழகப் பொதுசெயலாளர் ராகவானந்தம் பேசுகையில்:-

எங்களால் தேர்ந்து எடுக்கப்பட்ட புரட்சித்தலைவர் 3-ம் முறையாக முதல்வராகி இருக்கிறார். ரூபாய் 14 கோடிக்கு பல திட்டங்களை அறிவிக்க வந்திருக்கிறார் என்றார்.

விழாவில் அமைச்சர் ப.உ.ச. பேசியதாவது:-

தமிழக வரலாற்றில்புதிய ஏட்டைப் படைப்பவர் புரட்சித்தலைவர். அவர் நன்றி கூற வந்திருக்கிறார். மரணத்தில் இருந்து தங்கத் தலைவனை மீட்டுத் தந்த ஜானகித் தாயை வணங்குகிறேன், என்றார் ப.உ.ச.

### காளிமுத்து

அமைச்சர் காளிமுத்து:— பல விழாக்களின் சங்கமம் இங்கே நடக்கிறது ஏழைகள் மனதில் புரட்சித் தலைவர் அழியாத அஜந்தா ஓவியமாக திகழ்கிறார். புரட்சித் தலைவர் எங்கு இருந்தாலும் தமிழகத்தின் நினைவு தான் அவருக்கு இருக்கும்.

### அண்டே

அமைச்சர் அண்டே: ஆண்டிப்பட்டி மட்டுமல்ல. தமிழகமே புரட்சித் தலைவரது கற்கோட்டை, 25 படுக்கைகளுடன் எல்லா வசதியும் கொண்ட மருத்துவமனை இங்கு கட்டப்பட இருக்கிறது.

### முத்துசாமி

அமைச்சர் முத்துசாமி: இங்குகூடுதலாக 11 பேருந்துகள் 22 வழித்தடங்களில் துவக்கப்படுகிறது. 9 வழித்தடங்கள் முழுக்க முழுக்க ஆண்டிப்பட்டியில் உள்ளன.

### திருநாவுக்கரசு

அமைச்சர் திருநாவுக்கரசு:- 20 ஆம் நூற்றாண்டின் வள்ளலை பெற்றெடுத்து இருக்கிறீர்கள். ஆண்டிப்பட்டி அரசன்பட்டியாக மாறுகிறது. அண்ணாவுக்குப் பிறகு புனித ஆட்சி பொற்கால ஆட்சி நடக்கிறது.

### நல்லுசாமி

அமைச்சர் நல்லுசாமி:— தமிழகமே இங்கு வந்திருக்கிறது. ஆண்டிப்பட்டியில் 8 ஆயிரம் பேருக்கு 80 லட்சம் செலவில் வீடுகள் கட்டித் தரப்படும் மாதம் ரூபாய் 60 வீதம் 20 ஆண்டில் திருப்பி கட்டலாம்.

### அருணாசலம்

அமைச்சர் அருணாசலம்: ரூபாய் 7.0 லட்சம் செலவில் ஆதிதிராவிடர்கட்கு 125 வீடுகள் கட்டி திறக்கப்படுகின்றன. ஆதிதிராவிடர் பழங்குடியினரின் பாதுகாவலர் புரட்சித்தலைவர்.

### யூசுப்

அமைச்சர் யூசுப்: பொதுப் பணி சார்பில் பல திட்டங்கள் நிறைவேற்றப்பட உள்ளன. மூல வைகை திட்டம் ரூ. 49 கோடிக்கு தீட்டப்பட்டு ஆய்வில் உள்ளது.

### மணிமாறன்

திருப்பூர் மணிமாறன்:— ஆண்டிப்பட்டியில் 34 ஏக்கரில் ரூ 8 கோடியில் நலிந்த வருவாய் பிரிவினர்களுக்கு வீட்டு வசதி வாரியம் வீடுகளைக் கட்டி முடித்திருக்கிறது.

### செல்வேந்திரன்

விழாவில் நாடாளுமன்ற உறுப்பினர் பெ.செல்வேந்திரன் பேசும்பொழுது ஆண்டிப்பட்டியை அரசன்பட்டியாக்கிய மன்னாதி மன்னனை வரவேற்க நீங்கள் காத்து இருக்கின்றீர்கள். புராண காலத்தில் ராமன் கால் பட்டு அகலிகை புனிதம் பெற்றாள் என்பார்கள் இப்போது பொன்மன செம்மல் புரட்சித் தலைவர் பொற்பாதம் பட்டு ஆண்டிப்பட்டி புனிதம் அடைந்துள்ளது என்றார்.

### என் வி.என். செல்வம்

குடிசைபகுதி மாற்று வாரியத் தலைவர் என் வி என் செல்வம்பேசியதாவது:

ஆண்டிப்பட்டி தொகுதியில் 7 இடங்களில் 1010 குடும்பங்கள் பயன்பெறும் வகையில் ரூபாய் 18 லட்சம் செலவில் குடிசை பகுதி மாற்று வாரியத்தின் மூலம் வீடுகள் கட்டிக் கொடுக்கப்படும்.

### எஸ். அன்பழகன்

அரிசன வீட்டு வசதி வாரிய தலைவர் எஸ் அன்பழகன் பேசியதாவது:-

மயிலாடும்பாறை, வருசநாடு, கடமலைக்குண்டு ஆகிய இடங்களில் கட்டப்பட்ட சுமார் 185 வீடுகளை முதல்வர் திறக்கிறார். ஆண்டுக்கு 750 வீதம் 5 ஆண்டுகளுக்கு 3750 வீடுகள் கட்டப்படும் பல்வேறு தொழில்கள் தொடங்க திட்டங்கள் தீட்டப்படுகின்றன.

### கோடம்பாக்கம் குமார்

தமிழ்நாடு பாடநூல் நிறுவன மேலாண்மை இயக்குநர் கோடம்பாக்கம்குமார் பேசியதாவது:—

ஆண்டிப்பட்டி அரசினர் மேல்நிலை பள்ளியில் ரூபாய் 4 லட்சம் செலவில் கூடுதல் பள்ளிக் கட்டடங்கள் திறக்க ஆணையிடப்பட்டு இன்று அடிக்கல் நாட்டுவிழா நடைபெற உள்ளது.

### பட்டுக்கோட்டை பாப்பையன்

கதர்கிராமதொழில்வாரிய துணை தலைவர் பட்டுக்கோட்டை பாப்பையன் பேசியதாவது:—

ஆண்டிபட்டியில் நடப்பு ஆண்டில் ஜக்கம்பட்டியில் 100 கதர் நெசவுக் கூடங்கள் அமைக்கப்படுகின்றன. தேப்பட்டி தொழில் கூட்டுறவு சங்கம் மீண்டும் செயல்படுத்த தொழில் துறை மூலம் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

29 லட்சம் செலவில் 353 பேருக்கு பல்வேறு வேலை வாய்ப்பு அளிக்கதிட்டங்கள் நிறைவேற்றபட இருக்கின்றன.

### உக்கம்சந்த்

குடிநீர் வடிகால் வாரிய தலைவர் உக்கம்சந்த் பேசியதாவது:—

குடிநீர் பிரச்சினையை நிரந்தரமாக்கத்தீர்க்க பல திட்டங்களைத் தீட்ட முதல்வர் உத்தரவிட்டுள்ளார்.

ஆண்டிபட்டி தொகுதியில் கண்டமனூர், எம்.சுப்பலாபுரம், மரிக்குண்டு, முத்துரெங்கபுரம், கெக்கம்பட்டி, அழைக்கம்பட்டி, பத்துவார்பட்டி, பாலசமுத்திரம் மற்றும் ஒன்பது கிராமங்களுக்கு ரூபாய் 76.13 இலட்சத்தில் குடிதண்ணீர் திட்டம் நிறைவேற்றப்பட்டுள்ளது. இதன் மூலம் 13,268 பேர் பயன் பெறுவார்கள்.

நாசிங்கபுரம், துரைச்சாமிபுரம் பாலூத்துமந்திக்கணை, மூலக்கடை, முத்தாலம்மன்பாறை ஆகிய 5 கிராமங்களில் இணைந்த குடிநீர் வழங்கும் திட்டம் ரூபாய் 31 லட்சத்தில் நிறைவேற்றப்பட உள்ளது. இதன் மூலம் பயன்பெறுவார்கள் 8120

இவ்வாறு உக்கம்சந்த் பேசினார்.



ஆண்டிப்பட்டியில் வறுமைக் கோட்டிற்குக் கீழ் இருக்கும ஏழைகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பட்டா வழங்கினார்

## துணை சபாநாயகர் தம்பித்துரை மக்கள் குறை கேட்டார்

தர்மபுரி, செப. 20— தர்மபுரி தொகுதி எம்பி. யும் பாராளுமன்ற துணை சபாநாயகருமான மு.தம்பிதுரை தனது தொகுதியில் ஒன்றியங்களில் 5 ஒன்றியங்களில் சென்று மக்கள் குறைகளை கேட்டார் அவர் தர்மபுரி, பென்னாகரம், மேச்சேரி, நங்கவள்ளி, சாரமங்கலம், ஆகிய ஊராட்சி ஒன்றியங்களில் உள்ள பொது மக்களிடம் குறைகளை கேட்டார்.

பென்னாகரம் தொகுதியில் பாப்பாரப்பட்டி, பென்னாகரம், சின்னப்பட்டி பொம்பாலை ஆகிய இடங்களில் பொது மக்கள் குறைகளை கேட்ட போது எச் ஜி. ஆறுமுகம்எம்.எல்.ஏ. உடன் இருந்தார்.

மேட்டூரில் பயணியர் விடுதியிலும், பாப்பாரப்பட்டியில் பேரூராட்சி அலுவலகத்திலும் மக்கள் குறைகளை கேட்டார். பாராளுமன்ற துணை சபாநாயகரிடம் குடிநீர் வசதி, கழிப்பிட வசதி, ரோடு வசதி, மருத்துவ வசதி உட்பட பல கோரிக்கைகள் முன்வைத்து 500 மனுக்கள் குவிந்தன. மனுக்களை பெற்றுக் கொண்ட துணை சபாநாயகர் தகுந்த நடவடிக்கை எடுப்பதாகக் கூறினார்.



பெரியார் பிறந்த நாளையொட்டி மதுரையில் பெரியார் சிலைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் மாலை அணிவித்தார்.

# மத்திய வீட்டுவசதி அதிகாரியுடன் திருப்பூர்மணிமாறன் ஆலோசனை



பெங்களூர், செப். 20— மத்திய வீட்டு வசதி மற்றும் நகர்ப்புற வளர்ச்சி கழக தென் பிராந்திய தலைமை அதிகாரியுடன் தமிழக வீட்டு வசதி திட்டங்களுக்கு அதிக நிதி உதவி பெறுவது தொடர்பாக திருப்பூர் மணிமாறன் ஆலோசனை நடத்தினார்.

தமிழ்நாடு வீட்டு வசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன் 9ந் தேதி அன்று தர்மபுரி மாவட்டத்தில் நடைபெறும் வாரிய வேலைகளைப் பார்வையிட்டார். காலை ஒசூரில் ஹட்கோ நிதி உதவியுடன் 91 இலட்சம் ரூபாய் மதிப்பீட்டில் கட்டப்பட்டு வரும் 131 குடியிருப்புக்கள் எண்ணிக்கை கொண்ட நடுத்தர வருவாய் பிரிவினருக்கான திட்டத்தையும் 37 குடியிருப்புக்கள் எண்ணிக்கை கொண்ட உயர் பிரிவினருக்கான திட்டத்தையும் பார்வையிட்டார், மற்றும் ஹட்கோநிதி உதவியுடன் 41.72 இலட்சம் மதிப்பீட்டில் கட்டப்பட்டு வரும் 242 குடியிருப்புக்கள் கொண்ட குறைந்தவருவாய் பிரிவினருக்கான திட்டத்தையும், 41 இலட்சத்து 20 ஆயிரம் ரூபாய் மதிப்பீட்டில் கட்டப்பட்டு வரும் 239 குடியிருப்புக்கள் கொண்ட குறைந்த வருவாய்ப் பிரிவினருக்கானதிட்டத்தையும் பார்வையிட்டார்.

தருமபுரியில்ஹட்கோ நிதி உதவியுடன் 27.56 இலட்ச மதிப்பீட்டில் 28 குடியிருப்புக்கள் எண்ணிக்கை கொண்ட உயர் வருவாய் பிரிவினருக்கான திட்டத்தையும் 11 எண்ணிக்கை கொண்ட நடுத்தர வருவாய் பிரிவினருக்கான திட்டத்தையும் பார்வையிட்டார்.

மற்றும் ஹட்கோ நிதி உதவியுடன் 31 லட்சத்து 82 ஆயிரம் மதிப்பீட்டில் 95 குடியிருப்புக்கள் எண்ணிக்கை கொண்ட நடுத்தர வருவாய் பிரிவினருக்கான திட்டத்தையும் பார்வையிட்டார். வாரியத் தலைவருடன்வீட்டுவசதிமற்றும் நகர்புற வளர்ச்சி கழக தென் பிராந்திய தலைமை அதிகாரி சுரேஷ், தமிழ்நாடு வீட்டுவசதி வாரிய மேற்பார்வை பொறியாளர் மற்றும் நிர்வாக பொறியாளர் ஆகியோர் உடன் இருந்தனர்.

இச்சுற்றுப் பயணத்தின் பொழுது ஏராளமான கழக தோழர்களும், பொது மக்களும் வாரியத் தலைவரை சந்தித்தனர்வாரியதலைவர் அதிகாரிகளிடம் மேற்படி திட்டங்களை விரைவில் கட்டி முடிக்க உத்தரவிட்டார். பெங்களூரில், வீட்டு வசதி மற்றும் நகர்புற வளர்ச்சிக் கழக தென் பிராந்திய தலைமை அதிகாரி சுரேஷ் அவர்களுடன் வாரியத் தலைவர் மணிமாறன் வீட்டு வசதித் திட்டங்கள் மற்றும் கடன் வசதி சம்பந்தமாக பேச்சு வார்த்தை நடத்தினார்.

# சென்னையில் ஆபரேஷனில்லாத நவீன கண் சிகிச்சை துவக்கம்

சென்னை, செப். 20— நியூ எலைட் ஸ்கூல் ஆஃப் ஆப்டோமெட்ரி' என்ற கண் மருத்துவப் பள்ளி சென்னையில் துவக்கப்பட்டுள்ளது.

இப்பள்ளிக்கு விலை உயர்ந்த நுணுக்கம் மிகுந்த கருவி கிடைக்க டாக்டர் ஜே எம்.ஈனாத்என்றவல்லுநர் வழிசெய்துள்ளார் இவர் கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்திலே ஆப்டோமெட்ரி பள்ளியின் தலைவராகவும் பேராசிரியராகவும் இருக்கிறார்

ஆப்டோமெட்ரி என்பது கண் கோளாறுகளைசோதிப்பது கதிர்சிதர்வில் காண பெறும் தவறுகளைக் கண்டறிவதும் கண்ணாடி போட சொல்லியோ அல்லது உடற்பயிற்சி செய்தோ இக்கோளாறுகளைத் தீர்க்க முயலும் மருத்துவ முறையாகும். இதில் மருந்துஏதும் பயன்படுத்துவதில்லை. அறுவையும் கிடையாது.

சென்னையிலுள்ளஎலைட் ஆப்டிக்கல் கம்பெனி என்ற மூக்குக்கண்ணாடி கம்பெனி மருத்துவ ஆய்வு அறநிலையம் ஆகியவற்றின் ஆதரவில் தோற்றுவிக்கப்படும் இப்பள்ளி இந்த நாட்டிலயே ஒன்றுதான். இப்பள்ளி கண் பராமரிப்புத் துறையில் குறிப்பிடத்தக்க ஒரு முன்னேற்றம் என்றே கூறவேண்டும் என்கிறார் டாக்டர் ஈனாக்.

டாக்டர் ஈனாக் இதற்கு முன் இந்தியாவிற்கு வருகை தந்துள்ளார். மருத்துவ ஆய்வுக் கழகத்தினைச் சேர்ந்த டாக்டர் எஸ் எஸ் பத்ரிநாத்தை சந்தித்துள்ளார்.

இத்தகைய பள்ளிஒன்றை அமைக்க அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளையும் தெரிந்து கொண்டிருக்கிறார் அமெரிக்காவுக்குத் திரும்பியதும் இந்தப் பள்ளியை நிரப்பக் கூடியதான கருவிளையும் நூல்களையும் சேகரிப்பதில் வெற்றி கண்டார்.

அவருக்கு அன்பளிப்பாக கிடைத்தவற்றிலே நூற்றுக்கு எண்பது பங்கு கலிஃபோர்னியா பல்கலைக் கழகத்து ஆப்டோமெட்ரி பள்ளியிலிருந்துகிடைத்தவைஆகும். எஞ்சிய 20 சதவீதம் பேர்களே சுற்றிலும உள்ள ஆப்டோமெட்ரிஸ்ட் ஆப்தால் மொலஜிஸ்ட் (கண் மருத்துவர்) ஆகியோரிடமிருந்தும் ஃபிராங்களின் ஆப்டிகல் கம்பெனியிடமிருந்தும் கிடைத்தவை. அமெரிக்க பிரெஸிடென்ட் லைன்ஸ் என்ற கப்பல் கம்பெனி கட்டணம் ஏதுமின்றி இலவசமாக கருவிகளையும் நூல்களையும் இந்தியாவுக்கு அனுப்பி வைக்க இசைந்துள்ளது.



அண்ணா பிறந்தநாள் விழாவையொட்டி பள்ளிக்கூட குழந்தைகளுக்கு இலவச சீருடைகளை முதல்வர் புரட்சித் தலைவர் வழங்கினார்.

# விடுதலைப்புலி வலியுறுத்தல்

# ஜெயவர்த்தனே பணிந்தார்

## போர்நிறுத்தம் பற்றி கூட்டு கண்காணிப்புக்கு சம்மதம்

**புதுடெல்லி, செப். 20-தமிழ் ஈழ விடுதலைப்புலிகளின் நிபந்தனைகளை ஏற்று போர் நிறுத்த ஒப்பந்தத்தைக் கண்காணிக்க கூட்டுக் கண்காணிப்புப் படை அமைப்பதற்கு ஜனாதிபதி ஜெயவர்த்தனே ஒப்புக்கொண்டார்**

இலங்கைத் தமிழர் பிரச்சினையில் இலங்கை அரசும் தமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினரும் சுமுகமான முடிவு ஒன்றை எற்பதற்கு இந்திய அரசு தீவிர நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

போர் நிறுத்த ஒப்பந்தம் கண்டிப்பாக அமல்படுத்தப்படவும், இருசாராரும் வன்முறை சம்பவங்களில் ஈடுபடக்கூடாது என்றும் இந்தியா எச்சரித்திருக்கிறது.

இலங்கைத் தமிழர் பிரச்சினை விரைவில் தீர்க்கப்பட்டு இனப்படுகொலைக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டும் என்பதிலும் இந்திய அரசு தீவிரமாக இருக்கிறது.

### ஆலோசனை

பிரதமர் ராஜீவ் காந்தியின் அழைப்பை ஏற்றுதமிழ் ஈழ விடுதலை இயக்கத்தினர் புதுடெல்லியில் சுமார் 90 நிமிடம் பிரதமர் ராஜீவுடன் ஆலோசனை நடத்தினர்.

இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை அவர்கள் எடுத்துக் கூறினர் முன்னதாக மத்திய வெளிவிவகாரத்துறை செயலாளர் ரமேஷ் பண்டாரியுடன் அவர்கள் 5 முறை பேச்சுவார்த்தை நடத்தினர்.

### புதிய முகாமை ஏற்படுத்தக் கூடாது

சிங்கள வெறியர்கள் மற்றும் ஊர்க்காவல் படையினரிடம் ஆயுதங்கள் கொடுப்பதை உடனே நிறுத்த வேண்டும், தமிழர் பகுதிகளில் ராணுவத்தினரை ஏவி விடாமல் அவர்களை ராணுவ முகாம்களிலேயே நிறுத்தி வைக்க வேண்டும், ராணுவ சோதனை சாவடிகளை உடனடியாக கலைத்துவிட்டு ஊரடங்கு சட்டம் அமல் செய்யப்படுவதை ரத்து செய்யவேண்டும்.

புதிய ராணுவமுகாம்களை ஏற்படுத்தக்கூடாது. இப்படி பல்வேறு நிபந்தனைகளை விடுதலை இயக்கத்தினர் வலியுறுத்தினார்கள். வன்முறை சம்பவங்களில் தாங்கள் ஈடுபடமாட்டோம் என்றும் அவர்கள் உறுதி கூறினர்.

போர் நிறுத்த ஒப்பந்தம் எந்தவகையிலும் மீறப்படக் கூடாது என்றும் விடுதலைப் புலிகள் வற்புறுத்தினார்கள்.

போர்நிறுத்த ஒப்பந்தத்தை கண்காணிக்க இலங்கை இந்தியா ஆகிய இருநாடுகளைச் சேர்ந்த கூட்டுப்படை இலங்கையில் நிறுத்தப்பட வேண்டும். அல்லது செஞ்சிலுவைச் சங்கத்தைச் சேர்ந்த படையினரை நிறுத்தப்படலாம் என்றும் அவர்கள் ஆலோசனை தெரிவித்தனர்.

### கண்காணிப்புப் படை

தமிழர்கள், சிங்களவர்கள், முஸ்லிம்கள் ஆகியோர் அடங்கிய ஒரு கண்காணிப்புப் படையை இலங்கையின் வடக்கு கிழக்குப் பிராந்தியங்களில் நிறுத்தி எந்தவிகமான வன்முறை சம்பவங்களும் ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றும் அவர்கள் தெரிவித்தனர். இதற்கு ஜனாதிபதி ஜெயவர்த்தனே ஒப்புதல் அளிப்பார் என்றும் இந்திய அரசு நம்பிக்கை தெரிவித்தது.

கடந்த செவ்வாயன்று பிரதமர் ராஜீவுடன் நடந்த சந்திப்பின் போது இலங்கையில் தமிழர்கள் படுகொலை செய்யப்படுவதை விடுதலை இயக்கத்தினர் திட்டவட்டமாக விளக்கிக் கூறினார்கள்.

இந்த சமரசப் பேச்சு வார்த்தைகள் பற்றிய விவரங்கள் குறித்து இலங்கை அரசு அளிக்கும் பதிலைத் தொடர்ந்து 3வது சுற்றுப் பேச்சு வார்த்தை இலங்கை அரசுக்கும், விடுதலை இயக்கத்தினருக்கும் இடையே ஏற்படும் என்று தெரிகிறது. பிரதமருடன் நடந்த பேச்சு வார்த்தையின் போது ரமேஷ் பண்டாரி, மத்திய ரகசிய போலீஸ் (ரா)ன் தலைமை அதிகாரி ஜி. சி. சாக்சனா, பிரதமர் செயலகத்தின் கூடுதல் செயலாளர் சி.ஆர். கரேகான் ஆகியோர் உடனிருந்தனர்

### பண்ருட்டியார்

வெளிவிவகாரசெயலாளர் ரமேஷ் பண்டாரியுடன் விடுதலைப்புலிகள் ஆலோசனை நடத்திய போது, தமிழக மின்துறை அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், இந்திரா காங்கிரஸ் பொதுச்செயலாளர் ஜி. கே. மூப்பனார் தமிழக எம். பி.க்கள் ப. சிதம்பரம், ரங்கராஜன் குமாரமங்கலம் மற்றும் மத்திய உள் துறை, வெளிவிவகாரத் துறை அதிகாரிகளும் உடன் இருந்தனர்.

போர் நிறுத்த ஒப்பந்த ஏற்பாடுகள் இறுதியாக்கப்பட்டதும் விடுதலைப்புலிகள்சென்னையில் இந்திய அரசின் புதிய திட்டங்கள் குறித்து ஆலோசனை மேற்கொள்வார்கள். பின்னர் அவர்கள் புதுடெல்லி திரும்பியதும் புதிய திட்டம் பற்றிய பல்வேறு ஷரத்துக்கள் குறித்து மத்திய அரசுடன் விலாவாரியாக ஆலோசனை நடத்துவார்கள்.

## அண்ணா பிறந்த தினவிழா கூட்டங்கள்

### சேலம்

சேலம் நகர கழகம் சார்பில் அண்ணா பிறந்த தின விழா கூட்டம் வரும் 22-ந் தேதி மாலை பழைய பஸ் நிலையம்அருகில் சவுண்டப்பன் தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் கழக துணைப் பொதுச் செயலாளர் எஸ்.ஆர்.ராதா காடுவெட்டி கண்ணப்பன், எம்.எல்.சி. கண்ணன் எம். பி., நடராசன், சந்தானம், பலராமன், பாலகிருஷ்ணன், மனோகரன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

### பட்டுக்கோட்டை

பட்டுக்கோட்டை நகர கழகம் சார்பில் அண்ணா பிறந்த தினவிழா கூட்டம் வரும் 21-ந்தேதி மாலை பட்டுக்கோட்டை தலைமை அஞ்சல் நிலையம் அருகில் பட்டுக்கோட்டை பாப்பையன் தலைமையில் நடைபெறுகிறது. இக்கூட்டத்தில் அமைச்சர்கள் ஆர். எம்.வீ. வீராசாமி, கோமதி சீனிவாசன், கோவேந்தன், ஜேப்பியார் எம். எல். சி, சாமிநாதன் மற்றும் நாடாளுமன்ற, சட்டமன்ற, மேலவை உறுப்பினர்கள் கலந்துகொள்கின்றனர்.

## மூன்றில்ஒருவருக்கு கண்பார்வை கோளாறு

சென்னை. செப். 20— "இந்த நாட்டிலே கண் சம்பந்தமான நோய்களும் கோளாறுகளும் மிகக் கடினமானவை, கடுமையானவை அவசரமாக கவனிக்கப் படவேண்டியவை. பிரச்சினை மிக பயங்கரமானது. மருத்துவம் செய்ய வேண்டியவர்களின் தொகை மலைப்பூட்டுகிறது. உலகிலே பார்வை இழந்தவர்களில் மூவரில் ஒருவர் இந்தியர். இந்தியாவில் பார்வை இழந்தோர்களின் சிகிச்சைக்கு தேவைப்படும் மருத்துவர்கள் 40,000. ஆனால் இப்பொழுது இருப்பவர்கள் 5000 டில்லி வாழ் மக்களில் நூற்றுக்கு 90 பேருக்கு மேல் டிராக்கோமா (கண் இமை அரிப்பு நோய்) நோய் கண்டவர்கள் - கண்டிருப்பவர்கள். இது வைரஸ் தொத்து நோய். கடராக்ட் (கண் படலம், திமிரம்) நோய்க்கு அறுவைக்காக இந்நாட்டில் காத்திருப்பவர்கள் தொகை ஏறக்குறைய இரண்டு கோடி.

இந்தியாவில்கண் பார்வை சரி செய்ய வேண்டிய கண் அவசியத்தை டாக்டர்... கவனத்துக்குக் கொண்டு வருகிறார். இது மக்களின் வாழ்க்கைதரத்தை முறையை பாதிக்கக்கூடியவை. இங்குதான் ஆப்டோமெட்ரி பள்ளி கை கொடுக்க வருகிறது என்கிறார் அமெரிக்க டாக்டர் ...



பெரியார் பிறந்த நாளை முன்னிட்டு சென்னை அண்ணா மேம்பால அருகில் உள்ள தந்தை பெரியார் சிலைக்கு மேலவைத்தலைவர் ம.பொ.சி, அமைச்சர்கள் ஆர்.எம்.வீ. பொன்னையன் டாக்டர் ஹண்டே, வி.வி. சுவாமிநாதன் ஆகியோர் மாலை அணிவித்தனர்.

## இலங்கை தமிழர்கட்கு ஆதரவாக உண்ணாவிரதம்

திருச்சி, செப். 20— முதல்வர் புரட்சித்தலைவர் அரசு அறிவித்துள்ள இலங்கை இனப் படுகொலையை எதிர்த்து ஒரு நாள் "பந்த்" நடைபெறுவதையொட்டி வரும் 24-ந் தேதி திருவெறும்பூர் பாய்லர் ஆலை, துவாக்குடி மலை பகுதி எம்.ஜி.ஆர். மன்றங்கள் இணைந்து பயிற்சிநிலையம் அருகிலுள்ள மக்கள் திலகம் எம்.ஜி.ஆர் நற்பணி மன்ற அலுவலகத்தில், மன்றத் தலைவரும், தலைமைக் கழகப் பேச்சாளருமான கூத்தை கே. பி. எஸ். மணி தலைமையில் உண்ணாவிரதம் இருப்பது என்று தீர்மானிக்கப்படுகிறது.

பகுதி அனைத்து எம்.ஜி.ஆர். மன்ற கண்மணிகள் கலந்துகொள்ள வேண்டுமாய் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

## இசை நாடக கலை விழா

சென்னை. செப். 20- தமிழ்நாடு அரசுத்துறையும். அகில இந்திய வானொலி நிலையமும், சென்னை மாநகராட்சியும் இணைந்து வழங்கும் இசை நாடகக் கலைவிழா இன்று 20-ந்தேதி மாலை காசிமேடு காவலர் விளையாட்டு திடலில் நடைபெறுகிறது. குடும்ப நலத் துறை ஆணையர் சண்முகம் தலைமையில் அரசு தலைமை செயலர் டி. வி. அந்தோணி முன்னிலையில் அமைச்சர் அண்டே இந்த விழாவினை துவக்கி வைக்கிறார். வானொலி இயக்குனர் நாயர் குடும்பநலத்துறை இயக்குனர் சோசர்மா. குடும்பநல இணை இயக்குனர் ராதாகிருஷ்ணன் மாநகராட்சி துணை ஆணையர் குணசேகரன், காவல் துறை துணை கமிஷனர் காளிமுத்து. ஐசரிவேலன், அப்பர் சுந்தரம், சசிகரன். மற்றும் பலர் கலந்து கொள்கின்றனர். திரைப்பட இசையமைப்பாளர்கள் டி.ஜி. லிங்கப்பா, சந்திர போஸ், சியாமளா சுவாமி குழுவினரின் மெல்லிசை நிகழ்ச்சியும் நடைபெறும்.

## எஸ்.எஸ்.எல்.சி. தேர்வு

சென்னை செப். 20— எஸ்.எஸ்.எல்.சி மற்றும்— ஓ.எஸ்.எல்.சி. அக்டோபர் பொதுத் தேர்வுகள் அடுத்த மாதம் (அக்டோபர்) 10ந் தேதி முதல் நடைபெறுகிறது.

இத்தேர்வுக்கு விண்ணப்பித்துள்ள தனித்தேர்வர்கள் தங்கள் விண்ணப்பத்தில் குறிப்பிட்டிருந்த தேர்வுக்கூட நுழைவுச் சீட்டு விநியோக மையத்திற்கு தேர்வு ஆரம்பமாவதற்கு முன் உள்ள 5 நாட்களுக்குள் நேரில் சென்று தங்களுக்குரிய தேர்வுக்கூட நுழைவுச் சீட்டினையும், அச்சிட்ட தேர்வு கால அட்டவணை மற்றும் தேர்வர்கட்குரிய அறிவுரைகள் ஆகியவற்றை பெற்றுக்கொள்ளவேண்டும். தேர்வுக்கூட நுழைவுச் சீட்டுகள் தனித் தேர்வர்கட்கு அவர்களது வீட்டு முகவரிக்கு அஞ்சல் மூலம் அனுப்பப்படமாட்டாது என அரசு தேர்வுத்துறை இயக்குனர் தெரிவித்துள்ளார்.

## சேலம் மாணவர் பயிற்சி முகாம் ஒத்திவைப்பு

சென்னை, செப். 20— சேலம் நகரில் நடைபெறுவதாக இருந்த மாநில கழக மாணவர் பயிற்சி முகாம் அடுத்த மாதம் ஒத்தி வைக்கப்பட்டுள்ளது என மாணவர் அணி செயலாளர் லியாகத் அலிகான் தெரிவித்துள்ளார்.

இம்மாதம் 20, 21 22 ஆகிய தேதிகளில் நடைபெறுவதாக இருந்தபயிற்சி முகாம் அடுத்த மாதம் (அக்டோபர்) 11, 12, 13ந் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டுள்ளது. மாணவர்களின் கல்லூரி தேர்வுகள் துவங்கி விட்டபடியால் பயிற்சி முகாம் தள்ளிவைக்கப்பட்டுள்ளது என்று லியாகத் அலிகான் தெரிவித்துள்ளார்.



காவல்துறையில் சிறப்பாக பணியாற்றியவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வீரப் பதக்கங்களை வழங்கினார்.



மதுரை ஆயுதப்படை மைதானத்தில் காவல்துறை குதிரைப்படையின் அணிவகுப்பை முதல்வர் புரட்சித் தலைவர் பார்வையிட்டார்.

# ஜெயவர்த்தனேயின் ஏஜெண்டு சந்திரஹாசன்: உமாமகேஸ்வரன் புகார்

சென்னை, செப். 20— இலங்கை அரசின் ஏஜெண்டுகளாக சத்தியேந்திராவும், சந்திரஹாசனும் செயல்பட்டார்கள் என்று உமாமகேஸ்வரன் குற்றம் சாட்டினார்.

விடுதலைப் புலிகள் அமைப்புகள் இடையே கருத்துவேறுபாடு ஏற்பட்டு இருக்கிறது. விடுதலைப்புலி அமைப்புகளுக்குள் துரோகிகள் புகுந்து விட்டார்கள் என்று விடுதலைப்புலி (பிளாட்) அமைப்பைச் சேர்ந்த உமாமகேஸ்வரன் குற்றம் சாட்டியுள்ளார்

'பிளாட்' சார்பில் விடுக்கப்பட்டுள்ள மற்றொரு அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது:—

தமிழ் ஈழ அணிகளுக்கும் இந்திய அரசுக்கும் இடையே உறவில் சங்கடத்தை ஏற்படுத்த காரணமாக இருந்தவர்கள் சந்திரஹாசனும், சத்தியேந்திராவுந்தான்.

சத்தியேந்திரா இலங்கை ஆளுங்கட்சியான யு. என். பி. யின் நண்பர்.

சத்தியேந்திராவும், சந்திரஹாசனும் சமீபத்தில் தான் தமிழ் ஈழ விடுதலை அமைப்புகளுடன்தொடர்பு கொண்டனர். ஆனால் இலங்கை அமைச்சர் காமினி சேனநாயகாவுடன் நீண்டநாள் தொடர்பு உள்ளவர்கள், இன்றுவரை அந்த தொடர்பு இருந்து வருகிறது.

காமினி சேன நாயகாவின் தலைமை தேர்தல் ஏஜெண்டாக செயல்பட்டவர் சத்தியேந்திரா.

### திம்புபேச்சை சீர்குலைத்தவர்

ஈழ தேசிய விடுதலை முன்னணியில் (ஈ. என். எல். எப்.) இணைந்துள்ள அணியினருக்கு தெரியாமலேயே அவர்களது ஒப்புதல் இல்லாமல் திம்பு பேச்சுகளின் போது அந்த முன்னணியின் தலைமை பேச்சாளராக சத்தியேந்திராவை திணித்தவர் சந்திரஹாசன்.

சந்திரஹாசனும் அவரது மனைவியும் அமெரிக்காவில் விரும்பியபோதெல்லாம் நுழைய பாஸ்போர்ட் வைத்திருக்கிறார்கள்.

திம்பு பேச்சுவார்த்தையை குலைத்தவர் சந்திரஹாசன் தான்.

இந்த இரண்டு பேரையும் நாடு கடத்த உத்தரவிட்ட இந்திய அரசின் முடிவு தவறில்லை.

அவர்களுடன் உள்ள உறவை தமிழ் ஈழ விடுதலை அமைப்புகள் துண்டித்துக் கொள்ள வேண்டும்.

இவ்வாறு 'பிளாட்' விடுத்துள்ள அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

இந்தியாவின் சமரச முயற்சி தோற்க வேண்டும் என்பது சந்திரஹாசனின் நோக்கம். அவ்வாறு தோற்றால் அமெரிக்கா தலையிட்டு சமரசம் செய்யும் என்பது சந்திரஹாசனின் திட்டம் என்று உமாமகேஸ்வரன் கூறினார்.

# தொழிற்சங்க மோதலில் கொலை: விடுதலை ஆனவர்கட்கு தண்டனை

## உயர்நீதிமன்றம் தீர்ப்பு

சென்னை, செப். 20— தொழிற்சங்க மோதலில் நடந்த கொலையில் விடுதலை ஆனவர்களுக்கு அப்பீலில் தண்டனை வழங்கப்பட்டது.

கோயம்புத்தூர் அருகே ஒரு தொழில் சங்க தகராறு சம்பந்தமாக செசன்ஸ் கோர்ட்டில் விடுதலை செய்யப்பட்டவர்களுக்கு உயர் நீதி மன்றத்தில் தண்டனை வழங்கப் பட்டிருக்கிறது.

போத்தனூரை அடுத்த மலுமிச்சம்பட்டி எவரெஸ்ட் இன்ஜினீயரிங் ஒர்க்ஸ் என்ற தொழிற்சாலையில் 1982ல் வேலை நிறுத்தம் நடைபெற்றது. சி.ஐ.டி யூ. ஏ. ஐ. டி. யு. சி. ஆகிய யூனியனை சேர்ந்தவர்கள் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர்

### 56 பேர் விடுதலை

ஐ. என். டி. யு. சி.கலந்து கொள்ளவில்லை விசுவாசமாக வேலை செய்த தொழிலாளர்களை தொழிற்சாலைக்குள் புகுந்து கம்யூனிஸ்ட் தொழிற்சங்கத்தை சேர்ந்தவர்கள்தாக்கியதால் சாந்தப்பன் என்பவர் கொலை செய்யப்பட்டார். இரும்பு கம்பியாலும், குழாயாலும் அவர் தாக்கப்பட்டார். மற்றும் 6 பேர் காயமடைந்தனர் என்றுகோவை அடிஷனல் செசன்ஸ் கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது.

போதியசாட்சிகள்இல்லை தொழிற்சாலை நிர்வாகம் வெளியில் இருந்து ஆட்களை கொண்டு வந்ததால் தான் கலவரம் ஏற்பட்டது என்று கூறி வழக்கு தொடரப்பட்ட 56 பேரை நீதிபதி விடுதலை செய்தார்.

இதை எதிர்த்து அரசு தரப்பில் அப்பீல் செய்யப்பட்டது. அரசு தரப்பில் வழக்கறிஞர் பத்மினி ஜேசுதுரை வாதாடினார். உயர் நீதிமன்ற நீதிபதிகள் ராமசாமி க. ஏ. நடராஜன் ஆகியோர் இந்த வழக்கை விசாரித்து விடுதலை செய்யப்பட்டவருக்கு தண்டனை அளித்தனர்.

கருப்பையா (சி.ஐ.டி.யு. செயலாளர்)கோவிந்தராஜ், பாலகிருஷ்ணன் ஆகியோருக்கு ஆயுள்தண்டனை விதித்து நீதிபதி தீர்ப்பு அளித்தார். மற்றும் 8 பேருக்கு 2 வருட கடுங்காவலும் இன்னும் 2 பேருக்கு 6 மாத கடுங்காவல் தண்டனையும் கொடுக்கப்பட்டது

## கூட்டுறவில் மோசடி: ஊழியர் கைது

சென்னை, செப். 2— சென்னை ஐ. ஜி அலுவலகத்திலும், அண்ணா நகரிலும் உள்ள கூட்டுறவு சங்கத்தில் 2 ஆயிரம்ரூபாய்க்கு மேல் கையாடல் செய்ததாக கணபதிசுப்பிரமணியம் என்ற ஊழியரை போலீசார் கைது செய்து விசாரித்து வருகின்றனர்.

## தூத்துக்குடி அனல்மின் நிலையம்

திருநெல்வேலி, செப். 20- தூத்துக்குடி அனல்மின் நிலையத்தின் 2வது பிரிவில் ஏற்பட்டயந்திரக்கோளாறு சரிசெய்யப்பட்டு விட்டது. இப்போது இந்த நிலையத்தின் 2வது மற்றும் 3வது பிரிவுகள் இயங்குகின்றன, முதலாவது பிரிவு பழுது பார்ப்புப் பணிகளுக்காக மூடப்பட்டுள்ளது.

## பெண் தீக்குளிப்பு: 80 வீடுகளும் நாசம்

திருச்சிராப்பள்ளி, செப். 20— குடும்பத் தகராறு காரணமாக ஒரு பெண் தன்னுடைய உடல்மீது மண்ணெண்ணை ஊற்றி தீ வைத்துக் கொண்டார். அதே இடத்தில் அவர் துடிதுடித்து செத்தார்.

இந்த சம்பவம் திருச்சி மாவட்டம் கூடலூரில் நடந்தது.

அந்தப் பெண்ணின் புடவையில் தீப்பற்றிக் கொண்டபோது நெருப்பு தெறித்து அவரது வீடும் தீப்பற்றிக்கொண்டது.

தீ மேலும் பல வீடுகளுக்கு பரவியது சுமார் 80வீடுகள் நாசமாயின.

கரூர், நாமக்கல் ஆகிய இடங்களில் இருந்து தீ ணைப்பு படையினர் விரைந்து சென்று தீயை அணைத்தனர்.

இந்த விபத்தில் சுமார் 1லட்சம்ரூபாய்பெறுமானம் உள்ள சொத்துக்கள் நாசமாயின என்று கூறப்படுகிறது.

# காவிரி நீர் பிரச்சினை தீர புரட்சித்தலைவர் முயற்சி: கோவேந்தன் தகவல்

பேராவூரணி, செப்.20- காவிரி நீர்ப்பிரச்சினைக்கு நிரந்தரத் தீர்வுகாண முதல்வர் புரட்சித் தலைவர் முயன்று வருகிறார் என்று அமைச்சர் கோவேந்தன் கூறினார்.

தஞ்சை மாவட்டம், பேராவூரணியை அடுத்த புனவாசலில் பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை சார்பில் புதிய சீர்மரபினர் பள்ளி மாணவர் விடுதித் தொடக்கவிழா கோலாகலமாக நடைபெற்றது.

விழாவுக்கு பேராவூரணி ஊராட்சி ஒன்றியமுன்னாள் பெருந்தலைவர் எஸ். வைரவன் தலைமை வகித்தார். மாவட்ட பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அலுவலர் எஸ். அப்துல்கனி வரவேற்புரையாற்றினார்.

புதிய விடுதிக் கட்டிடத்தை திறந்து வைத்து இலவச சலவை பெட்டிகளை வழங்கி தமிழக பிற்படுத்தப்பட்டோர் மற்றும் மீன்வளத்துறை அமைச்சர் கோவேந்தன் பேசினார்.

### மேல்நிலைப் பள்ளி

அமைச்சர் கோவேந்தன் கூறியதாவது—

"இங்கு பேசிய ரபேல் பாதர் அவர்கள் இங்குள்ள உயர்நிலைப் பள்ளியை மேல்நிலைப்பள்ளியாக்க மிகவும் முயற்சித்தார்கள். ஆனால் இவ்வாண்டு 29 உயர்நிலைப்பள்ளிகளே மேல்நிலைப் பள்ளிகளாக மாற்றப்பட்டுள்ளன 30வது பள்ளியாக பெருமகளூர் பள்ளியை சேர்க்க முயற்சித்து வருகிறோம்கிடைத்து விடும் என்று நம்புகிறோம். வரும் ஆண்டுகளில் புனவாசலுக்காக முயற்சி செய்யலாம்.

புரட்சித்தலைவர் ஆட்சிக்குப் பிறகு இடையாத்தி, காலகம், ஆவணம், பைங்கால், உடையநாடு, நாடியம், களத்தூர், சித்துக்காடு போன்ற இடங்களில் உயர்நிலைப் பள்ளிகளையும் பேராவூரணி, குருவிக்கரம்பை பள்ளத்தூர், இராசாமடம் ஆகிய இடங்களில் மேல்நிலைப்பள்ளிகளையும் ஏற்படுத்தியுள்ளோம்.

### விடுதிகள் அமையும்

பெருமகளூர், திருச்சிற்றம்பலம் இடையாத்தி பள்ளிகள் மேல்நிலைப் பள்ளிகளாக ஆக்கப்படவேண்டும். புனவாசலையும் அந்தப் பட்டியலில் சேர்த்துக் கொள்ளலாம்.

பேராவூரணியில் 2 விடுதிகளும், பட்டுக்கோட்டையில் 2 விடுதிகளும், பெருமகளூரில் 1 விடுதியும், களத்தூரில் ஒன்றும், மல்லிப்பட்டினத்தில் ஒன்றும் உள்ளன. இவ்வாண்டு புனவாசலிலும், இடையாத்தியிலும் விடுதிகளை ஏற்படுத்தவிருக்கிறோம்.

போதுமான இடவசதியுள்ள கட்டிடங்களைவழங்க நீங்கள் முன் வந்தால் 50 மாணவர்கள் தங்கும் இவ்விடுதியை உயர்த்தி பலநூறு மாணவர்கள் தங்க ஏற்பாடு செய்யமுடியும். ஒரு விடுதி திறக்க ரூபாய் 70 ஆயிரத்துக்குமேல் செலவிடப்படுகிறது. எனவே இந்த விடுதியை சிறப்பாக பயன்படுத்தி மேலும் அதிக மாணவர்கள் சேர்ந்து படிக்கக்கூடிய நிலைமையை ஏற்படுத்தவேண்டும்.

### காவிரி நீர் பிரச்சினை

காவிரியில் தண்ணீர் வராமல் விவசாயிகள்வேதனைப்படுகிறார்கள், தஞ்சை மாவட்ட விவசாயிகள் மனம் மகிழும் வகையில், கர்நாடக அரசுடன் கலந்து பேசி காவிரிப்பிரச்சினைக்கு நிரந்தர முடிவு காண்பதற்கு தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தீவிர முயற்சி மேற்கொண்டு செயல்பட்டு வருகிறார். விரைவில் நமது கவலைகள் நீங்கும்.

இவ்வாறு அமைச்சர் கோவேந்தன் குறிப்பிட்டார்.

விழாவில் வருவாய் கோட்ட அலுவலர் பி.பத்மநாபன், கோட்ட வளர்ச்சி அலுவலர் ஏ. தாண்டவராயன், புனித ஆரோக்கிய அன்னை உயர்நிலைப்பள்ளி தலைமை ஆசிரியர் ஆர். ரபேல் மக்கள் குழு உறுப்பினர்கள் ஆர்.சுந்தரம் வி.வெங்கடாசலம் மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

முன்னதாக அமைச்சர் கோவேந்தனுக்கு வழி நெடுக வீதிக்குவீதி பெண்கள் ஆரத்தி எடுத்து மிகச் சிறப்பான வரவேற்பளித்தனர்.

## சென்னை சட்டக்கல்லூரி மாணவர் அணி நிர்வாகிகள்

சென்னை, செப் 20— சென்னை சட்டக் கல்லூரி மாலைநேர வகுப்பு கழக மாணவர் பிரிவு கூட்டம் இரா. கவுதம் தலைமையிலும் எஸ். செல்வம் முன்னிலையிலும் நடந்தது.

தலைவராக கெ. பாண்டியனும், துணைத்தலைவர்களாக கே. ஸி. ராதாகிருஷ்ணன், கோவிந்தசாமி ஆகியோரும் செயலாளராக டி. சுந்தரராமலிங்கமும் துணைச் செயலாளர்களாக ஜெ. ராஜேந்திரன், ச. முரளி ஆகியோரும் பொருளாளராக செ. பழனியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

செயற்குழு உறுப்பினர்கள் வருமாறு:

வி. மதுரம் சி. பரந்தாமன் கே. செல்வகுமார் ரமேஷ் பாலாஜி வி வெங்கட்கிரி நா. பழனியப்பன் மு. அப்துல்ரசாக்.

# நீர் நிர்வாக ஆராய்ச்சி: தமிழகத்துக்குஸ்வீடன் நாடு ரூ.1 கோடி உதவி

### அமைச்சர் காளிமுத்து தகவல்

மதுரை, செப். 20— நீர் நிர்வாக ஆராய்ச்சி நடத்துவதற்கு கோவை வேளாண்மை பல்கலைக் கழகத்துக்கு ஸ்வீடன் அரசு 1 கோடி ரூபாய் நிதி உதவி அளித்துள்ளது.

மதுரை வந்துள்ள தமிழக வேளாண்மைத் துறை அமைச்சர் காளிமுத்து நிருபர்களுக்குபேட்டிஅளித்தார்

அப்போது அவர் கூறியதாவது:

விவசாயிகளிடம் இருந்து கொள்முதல் செய்யப்படும் நெல்லுக்கு அளிக்கப்படும் ஆதார விலையை 15 ரூபாயிலிருந்து 20 ஆக உயர்த்த தமிழக அரசு உத்தேசித்துள்ளது.

### நிபுணர்கள் சந்திப்பு

குறுவைப்பயிருக்காக அதிக நீர் கிடைக்கும் வகையில் சுமார் 5 ஆயிரத்துக்கும் மேற்பட்ட ஆழ்கிணறுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன தஞ்சாவூர் மாவட்டத்தில் ஏற்கனவே 5 ஆயிரம் ஆழ் கிணறுகள் தோண்டப்பட்டுள்ளன.

குடிநீருக்காகபயன்படுத்தப்படும் கிணறுகளையும் சாகுபடி பாசனத்துக்கு பயன்படுத்துவது பற்றியும் அரசு ஆலோசித்து வருகிறது.

கோயம்புத்தூரில் உள்ள வேளாண்மை பல்கலைக் கழகத்திற்கு ஸ்வீடன் நாடு 1கோடி ரூபாய் வழங்கியிருக்கிறது. நீர்நிர்வாக ஆராய்ச்சி நடத்துவதற்கு இந்த உதவித் தொகையை ஸ்வீடன் நாடு அளித்துள்ளது. ஸ்வீடன் நாட்டு நிபுணர்குழு ஒன்று விரைவில் இந்தியா வரவிருக்கிறது

அவர்கள்தமிழக நிபுணர்களையும் சந்திப்பார்கள். தமிழக வேளாண்மை, நீர்ப்பாசனம், நிதி ஆகிய துறைகளைச் சேர்ந்த நிர்வாக அமைச்சர்களும் நீர் ஆராய்ச்சி குறித்து விவாதிக்க இருக்கிறார்கள்.

தமிழகத்தில் சம்பா சாகுபடிக்கான உரம் வாய்ந்த விதைகள் போதிய அளவு அரசிடம் கையிருப்பில் உள்ளன. தவிர உரம் யூரியா போன்ற பொருள்களும் போதிய அளவில் கைவசம் உள்ளன

இவ்வாறுஅமைச்சர் காளிமுத்து கூறினார்.

## விஷம் தந்து 69 பேரை கொன்ற மதத் தலைவி

மணிலா, செப். 20— விரக்தி அடைந்த மத அமைப்புத் தலைவி ஒருவர் விஷம் கொடுத்து 69 தொண்டர்களை கொன்றார்.

பிலிப்பைன்ஸ் தீவில் தாவாவ் என்ற மலைப் பகுதியில் மத அமைப்புத் தலைவி ஒருத்தி இருந்தார்.

அவரது தொண்டர்களுக்கு விஷ உணவை அவர் கொடுத்தார். அதைச் சாப்பிட்ட 69 பேர் இறந்தனர். விஷ உணவு சாப்பிட்ட 3 பேர் சிகிச்சைக்குப்பின் உயிர் பிழைத்தனர்.

பின்னர் அந்த மதத் தலைவிகத்தியால் தன்னைக் குத்திக்கொண்டுதற்கொலை செய்துகொண்டார்.

## அமைச்சர் நிகழ்ச்சிகள்

### சௌந்தரராசன்

செப். 21; திருச்சி.
22: கொச்சி, சோட்டாணிக்கரை.
23: கோவை.

### கோவேந்தன்

செப். 21: திருச்சி, பட்டுக்கோட்டை.
22: காட்பாடி, வேலூர் கழிஞ்சூர், வேலூர், ஆரணி.

## நாட் குறிப்பு

### சேப்பாக்கம்

20-9-85 மாலை 7 மணிக்கு 91-வது வட்டக் கிளை கழகத்தின் ஆலோசனைக் கூட்டம் பெரிய மசூதி அருகில் வட்ட அவைத்தலைவர் ஆர்.ஜி. கண்ணன் தலைமையில் துணை செயலாளர் எம். கணபதி பொருளாளர் அல்லாபக்ஷ் முன்னிலையில் நடைபெறுகிறது. அனைவரும் தவறாது வருகை தருமாறு வட்டச் செயலாளர் எம்.சி. ரவீந்திரன் கேட்டுக் கொண்டுள்ளார்.

## திருவள்ளூரில் அண்ணா விழா

திருவள்ளூர், செப். 20— திருவள்ளூரில் அண்ணா பிறந்ததின விழா எஸ். பட்டாபிராமன் எம்.எல்.ஏ., நகர் செயலாளர் டி. முத்துகிருஷ்ணன் தலைமையில் ஒன்றிய செயலாளர் ஓ.ஆர். ராதா முன்னிலையில் சிறப்பாக நடைபெற்றது.

புரட்சித்தலைவருக்காக உயிர் தியாகம் செய்த செம்மல் கிருஷ்ணனின் துணைவியாரிடம் நகர கழகத்தின் சார்பில் ரூபாய் 1000/-உதவி தொகை வழங்கப்பட்டது.

ராகவராஜா. துணை செயலாளர் தம்புராஜ் ஒன்றிய பொருளாளர் இ. மனோகரன், டி.பி. ஜீவன் பூபதி, புங்கை சிவலிங்கம், சக்கரவர்த்தி பால்கடை கே. பக்கிரிசங்கர், நிலக்கிழார் கே. சி. முனுசாமி, டீ கடை ராமகிருஷ்ணன், தயாளன், கைவண்டூர் ஏழுமலை, எம். கணேசன் ஆகியோர் கலந்து கொண்டனர்.

சுமார் 1 மணி அளவில் மோதிலால் தெருவிலுள்ள சாது மடத்தில் 2000 ஏழை மக்களுக்கு இலவச உணவு அளித்தனர்.

# தினசரி 15 லட்சம் லிட்டர் பால் குளிரூட்ட திட்டம்

### அமைச்சர் கே. ஏ. கே. தகவல்

கடலூர், செப். 20— தமிழகத்தில் நாளொன்றுக்கு 10 லட்சம் லிட்டர் பால் குளிரூட்டும் வசதி இன்று இருக்கிறது. இதனை நாளொன்றுக்கு15 லட்சம் லிட்டராக உயர்த்த திட்டமிடப்பட்டு விரிவாக்கப்பணிகள் நடந்து வருவதாக தொழிலாளர் நல அமைச்சர் கே.ஏ.கே. குறிப்பிட்டார்.

தென்னாற்காடு மாவட்டத்திலுள்ள சேத்தியாதோப்பு பால் குளிரூட்டும் நிலையத்தில் பாலிதீன் பைகளில் பால் அடைத்து கடலூர், சிதம்பரம், நெய்வேலி, விருத்தாசலம் ஆகிய நகர்களில் பால் விற்பனை செய்வதற்காக லட்சம் ரூபாய் செலவில் நிறுவியுள்ள இயந்திரத்தைத் தொடங்கி வைத்து அமைச்சர் கே.ஏ.கே. பேசினார்.

அவர் மேலும் குறிப்பிடுகையில் இது போன்ற பால் பதனப்படுத்தும் வசதிகளையும் தமிழகத்தில் மேலும் நாளொன்றுக்கு 5 லட்சம் லிட்டருக்கு திறனை உயர்த்திஇருப்பதாகக்குறிப்பிட்டார்.

இதுவரை பால் உற்பத்தியாளர் கூட்டுறவு சங்கங்கள் அமைந்திராத சிற்றூர்களில் பால் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கவும், கூடுதலாக பால் கொள்முதல் செய்யவும் சாத்தியமாகும் என்றும் குறிப்பிட்டார்.

### வி வி. சுவாமிநாதன்

இந்த விழாவில் தென் ஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர்கள் என். தங்கராசு, துரை. அன்பரசன் எஸ். கலிதீர்த்தான் ஏ, தங்கராசு, கே. ஆர். கணபதி ஆகியோர் கலந்து கொண்டு வாழ்த்துரை வழங்கினர்.

தலைமை வகித்துப் பேசிய கைத்தறி— நெசவாளர் துறை அமைச்சர் வி. வி. சுவாமிநாதன் தென்னாற்காடு மாவட்டத்தில் ஒரு கால்நடைத் தீவன ஆலை நிறுவப்படவேண்டுமென்றார்.

### கலைமணி

தமிழ்நாடு பால் உற்பத்தியாளர்கள் இணையத் தலைவர் க. கலைமணி, எம். எல். சி. பேசுகையில் நெய்வேலி நகரில் விரிவான முறையில் பால்பண்ணை திட்டம் ஒன்று அமைந்திட ஆய்வு நடந்து வருவதாக கூறினார்.

விழாவிற்கு வந்தவர்களை தென்னாற்காடு மாவட்ட பால் உற்பத்தியாளர் கூட்டுறவு ஒன்றிய தலைவர் முத்து கோவிந்தராஜன் வரவேற்றார். வடஆற்காடு மாவட்ட பால் உற்பத்தியாளர் கூட்டுறவு ஒன்றிய தலைவர் இரா. ச. மாறன் நிர்வாகஇயக்குநா டாக்டர் க. கோவிந்தராஜ், சிதம்பரம் பால் நுகர்வோர் கூட்டுறவு சங்கத் தலைவர் பி. ராஜவேலு. ஆவின் மக்கள் தொடர்பு அலுவலர் க, சிவகாமிநாதன் மற்றும் கூட்டுறவு பால் உற்பத்தியாளர் சங்கத் தலைவர்களும் பிரதிநிதிகளும் திரளாக கலந்து கொண்டார்கள். ஒன்றிய நிர்வாக இயக்குநா டாக்டர் ஆர். சாலமோன் நன்றி கூறினார்.

## ஆவடியில் அண்ணா பிறந்த தினவிழா

ஆவடி ஓ. சி. எப். அண்ணா தொழிற் சங்கம் சார்பில் அண்ணா பிறந்த தின விழா கூட்டம் நடைபெற்றது. இக்கூட்டத்தில் ஆவடிசிவா, மனோகரன், உத்தமராஜு, சோமுசா மற்றும்பலர் கலந்துகொண்டனர்.

# புதுக்கோட்டையில் தொழிற்பேட்டை: அமைச்சர் தகவல்

திருச்சி, செப். 20- தொழில் துறையில் பின் தங்கியுள்ள புதுக்கோட்டை மாவட்டத்தில் சுமார் 30 ஏக்கர் நிலப்பரப்பில் தொழிற்பேட்டை ஒன்று அமையவிருக்கிறது என்று அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் தெரிவித்தார்.

திருச்சிராப்பள்ளியில் பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட தமிழக ஊரகத் தொழில் அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் நிருபர்களிடையே பேசுகையில் கூறியதாவது:—

தொழில்துறையில் புதுக்கோட்டை மாவட்டம் மிகவும் பின் தங்கியுள்ளது. மாநில தொழில் அபிவிருத்திக் கழகம் (சிப்காட்) புதுக்கோட்டை மாவட்டத்தில் தொழில்துறை மேம்பாட்டிற்கு பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டிருக்கிறது.

சுமார் 30 ஏக்கர் நிலப்பரப்பில் தொழிற்பேட்டை ஒன்று அமையவிருக்கிறது இதற்கானபூர்வாங்கவேலைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன.

தொழிற்பேட்டை அமையவிருப்பது பற்றிய ஆய்வு வேலைகளும் நடக்கின்றன. இதுகுறித்து தொழில்முனைவோர், மற்றும் தொழில் துவங்குவோர் ஆகியோரின் கருத்தரங்கு ஒன்றும் அடுத்த மாதத்தில் நடைபெறவிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ஆனூர் ஜெகதீசன் கூறினார்.

# காரைக்குடி-சிவகங்கை 60 கோடி ரூபாயில் வீடுகள் கட்டும் பணி

### திருப்பூர் மணிமாறன் தகவல்

மதுரை, செப். 20— காரைக்குடி, சிவகங்கையில் அரசு ஊழியர்களுக்கும் பொது மக்களுக்கும் வீட்டு வசதிவாரியம் 60 கோடி ரூபாய் செலவில் புதிய வீடுகளை கட்டுகிறது. இந்த பணிகளை வாரியத் தலைவர் மணிமாறன் பார்வையிட்டார்.

தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் ஆட்சியில் சிவகங்கையினை தலைமையகமாகக் கொண்டு செயல்பட்டு வரும் பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் மிகவும் முனைப்போடு மக்களுக்கு வீடு கட்டும் பணியினை செயல்படுத்தி வருகிறது.

### சலுகை வாடகை

அரசு அலுவலர்களுக்கு சலுகைவாடகை குடியிருப்புக்கள் சிவகங்கையில் 288 வீடுகள் 2 கோடியே 42 லட்ச ரூபாய் செலவிலும், காரைக்குடியில் 36 வீடுகள் 31 லட்சரூபாய் செலவிலும் கட்டிக்கொண்டு வருகின்றது.

பொதுமக்களுக்காக சிவகங்கையில் 230 ஏக்கர் நிலத்தில் 7,300 குடியிருப்புக்கள் 23 கோடி ரூபாயிலும், காரைக்குடியில் 155 ஏக்கர் நிலத்தில் 4,500 வீடுகள் 10 கோடி ரூபாயிலும், தேவக்கோட்டையில் 100 ஏக்கர் நிலத்தில் 3,000 வீடுகள் 15 கோடி ரூபாயிலும் மானாமதுரையில் 100 ஏக்கர் நிலத்தில் 3,000 வீடுகள் 10 கோடி ரூபாயிலும் பொருளாதாரத்தில் நலிவுற்றோர், குறைந்த மற்றும் நடுத்தர, உயர்தர வருமான முள்ளவர்களுக்காக ஐந்து ஆண்டுகளுக்குள் கட்டி முடிக்க திட்டமிட்டு, அனைத்துப் பூர்வாங்கமான பணிகளும் துரிதமாக்கப்பட்டு வருகின்றது.

சிவகங்கையில் அரசு அலுவலர்களுக்கான குறைந்த வாடகை வீடுகள் கட்டப்பட்டு வருவதை தமிழ்நாடு வீட்டுவசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன் நேரிடையாக பார்வையிட்டு கட்டுமானப் பணிகளை துரிதப்படுத்துமாறு பொறியாளர்களுக்கு ஆணையிட்டார்.

# பஞ்சாப் தேர்தல்: பாதுகாப்பு ஏற்பாடு மேலும் தீவிரம்

### 20,000 போலீசார் தயார்

புதுடெல்லி, செப். 20. பஞ்சாபில் நடைபெறவிருக்கும் தேர்தலை யொட்டி பாதுகாப்பு நடவடிக்கைகளை பஞ்சாப் அரசு மேலும்தீவிரப்படுத்தி யிருக்கிறது. இதர மாநிலங்களைச் சேர்ந்த சுமார் 20 ஆயிரம் போலீசும் தயார் நிலையில் வைக்கப்பட்டுள்ளனர்.

பஞ்சாபில் வரும் 25ம் தேதி சட்டசபை மற்றும் நாடாளுமன்றத் தேர்தல்கள் நடைபெறவிருக்கின்றன.

அசம்பாவிதமான சம்பவங்கள் எதுவும் ஏற்படாமல் இருக்க பஞ்சாப் அரசு பாதுகாப்பு நடவடிக்கைகளை மேலும் தீவிரப்படுத்தியிருக்கிறது.

தீவிரவாதிகள் பயங்கரவாதிகளின் அச்சுறுத்தல்கள் எதுவும் நடக்காமல் இருக்க பஞ்சாப் அரசு கண்காணிப்புடன் இருக்கிறது. தேர்தல் நடப்பதற்கு இன்னும் 5 நாட்களே இருக்கின்றன பஞ்சாப் மாநிலத்தில் 12 ஆயிரத்து 70 வாக்குச் சாவடிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

மாநில அரசின் வேண்டுகோளைத் தொடர்ந்து மத்திய ஆயுதப்படைகளை பஞ்சாபுக்கு அனுப்பிவைக்க மத்திய அரசு உறுதி அளித்துள்ளது

மாநில அரசின்போலீசார் மற்றும் பாதுகாப்புப் படையினர் தவிர இதர மாநிலங்களைச்சேர்ந்த போலீஸ் படையினரும் பஞ்சாபில் பாதுகாப்பு நடவடிக்கைகளில் ஈடுபடுவார்கள்,

இதர மாநிலங்களைச் சேர்ந்த சுமார் 20 ஆயிரம் போலீசார் அனைத்து வாக்குச்சாவடிகளிலும் நிறுத்தப் படுவார்கள். ஏற்கனவே சுமார் 1 லட்சம் போலீசார் தேர்தல் பந்தோபஸ்து நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்பட்டனர். இதற்குக் கூடுதலாக இதர மாநிலபோலீசார்20 ஆயிரம்பேர் செயல்படுவார்கள்.

பாகிஸ்தானில் இருந்து பயங்கரவாதிகள் யாரும் பஞ்சாபுக்குள் நுழையா வண்ணம் ராணுவம் உஷார் படுத்தப்பட்டுள்ளது.

பயங்கரவாதிகளின் நடவடிக்கைகளை முறியடிக்க அனைத்து நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## பஞ்சாப்தேர்தல்: தீவிர பிரச்சாரம்

சண்டிகர், செப். 20— பஞ்சாபில் நடைபெறுகிற பொதுத்தேர்தலையொட்டி போட்டியிடும் வேட்பாளர்கள் தீவிர பிரச்சாரம் செய்து வருகின்றனர்.

இத்தேர்தலுக்காகஏராளமான ஆட்டோ ரிக்ஷாக்களும்ஜீப், கார்கள், டிரக்கர், டிராக்டர்கள் பயன்படுத்தப்படுகின்றன.

இந்த வாகனங்களில் ஒலிபெருக்கிகள் பயன்படுத்தப்படுகின்றன, இந்த ஒலிபெருக்கிகளில் லோங்கோவாலும் பிரதமர் ராஜீவ் காந்தியும் பேசிய பேச்சுக்கள் ஒலிபரப்பப்படுகின்றன.

பொதுவாக எல்லா வாகனங்களும் கிராமப்புறங்களில்தான் பிரச்சாரத்தில் ஈடுபட்டு வருகின்றன.

## உதகையில் அண்ணா விழா

உதகை, செப். 20— உதகை மெயின் பஜார் பெரியார் திடலில் அண்ணா பிறந்த நாள் விழா கொண்டாடப்பட்டது. மாவட்டச் செயலாளர் போ. கோபாலன். உச்சிகவுடர் எம். எல் ஏ., சுவகுமார் எம். எல். ஏ. மற்றும் பலர் கலந்து கொண்டனர் 'கர்மத்தின் வெற்றி' என்ற நாடகமும் நடைபெற்றது.

# விமானம் கடலில் விழுந்தபோது பலர் உயிருடன் இருந்தனர்

### அயர்லாந்து நிபுணர் சாட்சியம்

காரிக், (அயர்லாந்து) செப். 20— ஏர் இந்தியா விமானம் கனிஷ்கா அயர்லாந்து கடலில் வீழ்ந்து விபத்துக்குள்ளான போது அதில் பலர் உயிருடன் இருந்தனர் என்று அயர்லாந்து நிபுணர் சாட்சியம் அளித்துள்ளார்.

ஏர் இந்திய விமானம் அயர்லாந்து கடலில் விபத்துக்குள்ளாகி அதில் இருந்த 329 பேரும் மரணமடைந்தது தெரிந்ததே.

இந்த விபத்து பற்றி விசாரணை நடந்து வருகிறது

அயர்லாந்து நிபுணர் டாக்டர் ஜான்ஹாரிசன் கூறியதாவது:-

இறந்தவர்களில் 131 பேர்கள சடலம் கண்டு பிடிக்கப்பட்டது. இதில் 8 சடலங்களை பிரேத பரிசோதனை செய்ததில் அவர்கள் கடல் தண்ணீரில் மூழ்கி மூச்சுத்திணறி இறந்து இருக்கக்கூடும்.

விமானம் கடலில் விழுந்த போது அவர்கள் உயிருடன் இருந்து இருக்கக்கூடும். [illegible]

## தொண்டர் அணி அறிவிப்பு

சென்னையில் செப்டம்பர் 29 ந் தேதி கழகம் நடத்தும் பேரறிஞர் அண்ணா பிறந்தினப்பேரணி வரலாற்றுச்சிறப்புமிக்கதாக நடைபெறஇருக்கிறது.

இதய தெய்வம்

**டாக்டர் புரட்சித்தலைவர்**

அந்தப் பேரணியைப் பார்வையிடுகிறார்.

பேரணியை ஒழுங்குபடுத்த தொண்டர் அணிக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது.

கோபாலபுரம் மைதானத்தில் தினசரி காலை 7 மணிக்கு பயிற்சி தொடங்குகிறது. புதிதாக சேர விரும்பும், மற்றும் பயிற்சி பெறும் தொண்டர் அணித்தோழர்கள் காலை 7 மணிக்கு கோபாலபுரம் மைதானத்துக்கு வந்து சேருமாறு கேட்டுக் கொள்கிறேன். 28ந் தேதி வரை பயிற்சி நடைபெறும்.

**ஜேப்பியார் எம் எல் சி**
தொண்டர் அணித்தலைவர்



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road, MADRAS-600029